அஞ்சமகமஞ்சமகமாயினுமுயர்குலத்த
விஞ்சசீரறுதொழிலுமறுதொழிலாக்கவிட்டான்
பஞ்சணையிற்கலவிகலம்பாராட்டிச்செவிக்கோதும்
வஞ்சியர்கள்சதுர்மறையேவழங்குசதுர்மறையாளன். ௨௰

சந்தியானதுமறந்துதரித்தாலும்பொதுச்சேரிச்
சந்தியாந்தமறந்துதரித்திடான்சந்திதொறு
முந்தியேதொழுமிடங்கண்முறைமறந்துபோதுமாதர்
முந்தியேதொடுமிடங்கண்முறைமறவாதொழுகினான். ௨௧

பிரமமாநன்மணமும்பிரசாபத்தியமணமும்
விரவுபிரமச்சரியம்விட்டமையால்விட்டொழிந்தான்
சரதமகிழ்ந்ததனாற்றெய்வமணச்சடங்கொழிந்தா
னருமறையினெறிதவறியாரிடமும்விடுத்தனனால். ௨௨

பாசுரத்திலெழுதரியபாவையனைவழிச்செலவின
மாசுரத்தில்விழித்துயிலிற்பைசாசமணம்புரிந்தான்
பூசுரர்க்குமுறையல்லாப்போரேறுபோய்த்தழுவி
யாசுரத்திற்கோவசியர்ணங்காளமணஞ்செய்தான் ௨௩

மாபுதனிலேழமையோன்மடமகளைவலிதாக
விரவுதனிற்கொண்டிராக்கதமாமணம்புணர்ந்தா
னரவனையவல்குலார்மூவகையாரல்லாமற்
கரவுதனிற்சிலமாதர்கந்தருவம்போற்புணர்வான். ௨௪

கோமளஞ்சேரிவ்வகையாற்குலவுமணமடவாரை
மாமனையிற்○சாரிகைபோன்மாறாதசிறைப்படுத்திக்
காமவெறிமூட்டுகின்றகலகவிழிக்கணிகையரைப்
பூமலர்மேலன்னமெனப்பொன்றூவிநிறைவித்தான். ௨௫

வேறு.

பூவியலன்னம்போல்வார்புலவியேநிலமதாகத்
தூவியபொருள்கள்யாவுநாறுமுளைவித்தாகக்
காவியங்கண்ணார்மோகக்கலபபையேகருவியாக
மேவியசரதபோகவிரகவேளாண்மைசெய்தான். ௨௬

அந்தியும்பகலுமாயவரும்பொழுதிரண்டுமொன்ற
சந்தியுமறந்தான்காமவொழுக்கமுந்தவறிவேத
மந்திரவிளக்கமெல்லாம்வரவரமாதர்மோக
முந்தியகுறைக்காற்றலவிந்தனவொவ்வொன்றாக. ௨௭

அடிமுறைநடந்துசெல்லவறிவுகண்ணிலனாய்மோகச்
செடிவழிச்சென்றுகாமத்திரண்புலிதுடரவோடிக்

---

○ சாரிகை-பூவைப்பட்சி

கொடியிடைக்கணிகைமாதர்கொங்கைவெற்பிடறிவீழ்ந்து
கடிதடவாவிதாவிக்கலவியங்கயத்துளாழ்ந்தான். ௨௮

கொம்பெலாமன்றென்காமக்கொடிநதளிர்தளிர்த்துச்சாதி
பம்பியவரம்புதோறும்பழிமொழிக்காடுபல்கி
யம்பலஞ்சாதிதோறுமம்பலாயரும்பியெங்கும்
வம்பலர்பெருகப்பூத்துவடுக்களாய்ப்பரந்தவன்றே. ௨௯

ஆனவைசெவியிற்கேளாவவன்குலத்தறிஞனுவான்
ஞானநூல்வனுக்கோதினன்னெறியுணர்த்தச்சென்றான்
றன்முனாம்பயிற்றுங்கல்விதன்னையுமயர்த்ததோரான்
மேனெறிசெறிவிலானைவேறிடத்திருத்திச்சொலவான். ௩௰

வேறு.

எறும்புகடையானைதலையெண்பத்துநான்கிலக்கயோனிபேதம்
பிறந்துழலுமுயிர்களெல்லாமனிதராய்ப்பிறப்பரிதுபிறநதாரேனும்
பறம்பர்சோனகர்சூனரீனர்கானவர்நுளையர்பழையராதி
யறைந்தகீழ்க்குலநீங்கிமேற்குலத்திலவதரிப்பதரிதுமைந்தா ௩௧

தாழ்குலந்தோர்கோடிசென்மந்தவம்புரியவேண்டுமுயர்சதுர்த்தராகக்
கேழுழவர்கோடிதவஞ்செயவேண்டும்வணிகர்சென்மங்கிடைக்கவேண்டிற்
சூழ்வணிகர்கோடிசென்மந்தவம்புரியினரசரெனத்தோன்றுநிற்பர்
வாழரசர்கோடிசென்மந்தவஞ்செயினுங்கிடையாதுமறையோர்சென்மம். ௩௨

அந்தணராய்ப்பிறந்திடினுங்குருடுசெவிடூமைமுடமகன்றுமேனி
சநத... டன்பிறப்பரிதுபிறக்கினுமபாக்கிதத்தாலமாநீ
கந்தமலாம்புனமொமாருமியீர்நாட்டில்வரலரிதுகணடா பபார்மேன்
முடிமுறவிதுனைக்குயாபிர்மபறறனை யெத்தனதவமோ முயனரு முன்னர். ௩௩

ஓதுபிரமச்சரியமொழிந்தவானப்பிரத்தமுயர்சன்னியாச
நீதிநிலைபெறு ௦ காருகத்தியமாமாச்சிரமநெறிகளுனைகிற்
கோதிலாமூவர்நெறிபபடர்பயிர்களுக்கொருகொம்பாங்கொள்கையாலே
மேதினியில்யாவருக்கும்வியன்காருகத்தியமேவிசேடமாமால். ௩௪

முனமாகவைகறைப்போதெழுந்துசவுசாதிமுதன்முடித்துவாசப்
புனலாடிச்செபதவங்கண்முயன்றுகடவுட்பூசைமுயன்றுமுப்பா
னலோம்பியைவகைவேள்வியுமியற்றிக்கிளைஞருடனடுத்தோர்தம்மைத்
தினமோம்பிநுகர்ந்துகலைபயின்றிருத்தலில்லறத்தார்செய்கையாமால். ௩௫

பூமரமாயூர்வனவாய்மிருகமாய்ப்புட்குலமாய்மனிதராகிப்
பாமரமாய்ப்பண்டிதராயொழுகத்தானுயர்ந்தேணிப்படிபபோலேறித்
தேமறையோனுயினைமேற்சுவர்க்கபதத்தனைதுபதஞ்செலுத்தற்பாலாய்
காமமெனுமந்தரத்தேதாவியினிக்கீழ்வீழல்கடனோவையா. ௩௬

---

௦ காருகத்தியம்-இல்லறவியல்பு.

கீழ்குலத்தாழ்ந்தாள்வேறுகிளைவேறுதாரம்வேறாய்
வாழ்வுபோய்க்குலினாநினை ௦ மைமைமூவகையின்மாய்ந்தார்
சூழ்தருநரம்புதண்டஞ்சுரைமூன்றுமிசையில்யாழாம்
வீழ்படில்வேடாகண்ணிவிறகுவெம்பலியோடன்றே. ௪௬

அங்கணத்துக்கபால்போலருங்குலப்பெருமைவிட்டுத்
தங்கணகிளைகைவிட்டுத்தாரமோரேர்கைவிட்டுக்
கங்கணக்கையார்மோகங்கைவிடானறிஞோவிட்ட
கொங்கணஞ்சிலநாள்வைகிக்காழகங்குறுகப்புக்கான. ௪௭

வேறு.

நீர்காடுநீங்கியுமேநீங்காதுபின்ருடரும்
போர்நாடுகாமவெள்ளநீந்தவொருபுணையின்றிச்
சீர்நாடுமாதாதனக்குடநதேடித்திரிவாறகு
வார்நாடுநடைதீர்ந்தமலைநாடுவாயத்ததுவே. ௪௮

மலைநாட்டில்வருந்தூர்த்தமறையோனைமடக்கொடிமார்
முலையானைமதமூட்டிமுரிபுருவச்சிலைகுனித்துக்
கலையாளிதேர்நிரைத்துக்கட்டெழிலினூற்பகைத்த
சிலைமாரனபொரவிடுத்தசேனையெனபபுடைவளைநதார். ௪௯

காவிநெடுங்கண்வலையானமடுப்பவருங்காரிகைமா
ராவிமருண்டருமறையோனழகுவலைப்புகுநதவனை
தூவியனம்போற்றுடர்நதார்தூர்த்தமாமறையோனும்
பூவையர்தம்பிடிச்சூழல்புகுநதமதக்களிறானான். ௫௰

ஆம்பகிதன்குலமவாழவும்பறிகொடுத்துமவர்மோகம்
போம்பரிசிலுவநதுவிடானபொய்களவாறபொருள்கவர்நது
காம்புறமூ[illegible]தாளியராங்கணிகையாபாறகருததழிவான்
வேம்பரிசிலுடலகரிநதும்விளக்குவிடாபபதங்கம்போல ௫௧

சிலமாதர்செங்கையொடுஞ்சிலமாதர்கொஙகையொடும்
பலமாதர்புலவியொடும்பலமாதாகலவியொடும்
நலமேறியுவட்டெடுப்பநாளுபோக[illegible]சித்துத்
தொலையாதகனிபழுத்துச்சொரிசோலைக்குருகானான். ௫௨

வேறு.

மானமின்றியவல்லியர்மாமுலை
யானைவாய்க்கரும்பாகியுங்கண்வலை
மீனமாகியுமல்குல்வியாழதநின்
பீனவாயபெருநதேரையுமாகினன. ௫௩

---

௦ மைமை—சநதுப்பதிலலாமை

தையலாரிடைத்துகம்விளைந்ததும்
பொய்யெலாநிறைபோகம்விளைந்தது
மையன்மோகம்விளைந்ததுமற்றவன்
மெய்யெலாம்வினையாகவிளைந்ததே. ௫௪

நாணிலார்நயனப்பெருந்தும்பியே
ஊணமாமுடலெங்குந்துளைத்ததோ
காணலாமதன்பூங்கணைகாயமோ
பூணலாப்பிணிபூண்டுபுண்ணாயினன. ௫௫

வின்றுலாவுயர்விண்ணவராயினும்
பெண்களகாமமபிடித்தவருய்வரோ
புண்களாகிப்புரந்தரனமெய்யெல்லாங்
கண்களானதுகாமத்திலனறே. ௫௬

மருவிருக்குமலர்க்குழல்சோரவே
யுருகிநிந்தமுடனபுணர்மாதரார்
பெருவருத்தமுற்றனபிணிகாண்டனு
மருகிருக்கவருவருப்பாயினா. ௫௭

வேறு.

முன்பெலாங்களிகூரமோகாமமறுபவித்த
வன்பிணியாலுழலகாலமறுகினிடைத்தளிர்ந்
தொனபெலாங்கசிந்துருகுமிறபிறந்தாரல்லாம
லனபிலாடபொதுமாதராபதத்துக்காவாரோ. ௫௮

நல்லாடுபுறத்தளாசசாரணமல்லாடேகி
மல்லாடுபுறத்தளயபாண்டிவளநாடணைந்தான்
கல்லாடுகதலநெறிபோய்க்கைப்பொருளபோய்நோய்பூண்டும்
புல்லாடுகாமமெனுந்தேக்கிலையிறபுனலபோலவான. ௫௯

வடயரப்பசிபிடுக்கவுறுப்பெல்லாநோய்பிடுங்க
வாடைதுணிபோர்த்தவுடலீப்பிடுங்கவருந்துவான
பேடைமயிலார்விரகபிணிகருடைந்துபுறங்கடைபோய
வாடையேறறயர்வானேல்யாரைவிடுவானமதனன. ௬௰

சரதநெறிமணவேட்கைதனமனையார்மனங்கொதிப்ப
விரகொடும்போய்ப்பிறர்மனையினமிதித்தகால்விரலழுகி
மரபழியமுந்திதொட்டமணிக்கரங்களுடனழுகிப்
பரமனையார்தமைத்தழுவும்படிவமெலாம்புண்ணானன. ௬௧

தலைமைசாற்குலமறுகுசார்கிலாணடுமொழுக்கால்
விலைமாதர்மறுகணையான்மேனியுருவழிந்தமையால்
வலையர்சேரியிலூனுமளளர்சேரியின்மதுவும்
புலையர்சேரியிலருந்திப்புறங்கடையிலுறங்குவான. ௬௨

அம்மையிலேபலிக்குமென்பர்செய்தவினையாங்கொருசார்
செம்மையிலாமறையோன்செய்தீவினையெல்லாமினுக்
கிம்மையிலேபலித்ததனாலிவையறிநதுவிலகாதார்
வெம்மையுறுகொடும்பிணிக்குநரகினுக்கும்விருந்தாவார். ௬௩

வருநாளின்முகம்பார்த்தோர்மறுநாட்கண்பாரார
வொருநாளிலுறைபதிமற்றொருநாளிலுறையாமற்
பெருநாடுபலகழித்துப்பிறநாடுசேர்வதற்குத்
தருநாடுமிருள்வனத்துவினைதள்ளததனிபோனான். ௬௪

ஆகத்திலெழும்புபசிக்கருநதுவதொன்றில்லாமற்
றாகித்தாலுலர்ந்துதணணீருங்கிடையாமற
சோகத்தாலயர்நதுகொடும்பாலையிடைச்சுழல்கின்றான.
பாகததாறபகுத்துண்ணார்படும்பாடுமிதுவன்றே. ௬௫

கூண்டுவருநெறிதவறிககொடுஞ்சுரம்புக்கயர்காலைப்
பூண்டகுலநெறிதவறிப்புலைபுகுநதமறையோனைத
தீண்டலுறும்வாலாமைதீரவோசெழுங்கதிரோன்
காண்டலுறுமாபாவங்கழியவோகடறகுளித்தான! ௬௬

உழிக்கொண்டபுள்ளொளிப்பவுயர்வனமுங்கண்முகிழப்ப
விழிக்கொண்டசுரமடைநதாயினியெங்கேபோவதெனப்
பழிக்கொண்டமறையோன்செய்பாவமெல்லாங்கூடியொரு
வழிக்கொண்டுவளைநததுபோல்வநதுவளைநததுகங்குல். ௬௭

வேறு.

அன்றுமோருணவில்லாமலதற்குமுன்னிரண்டுநாளா
வொன்றுமேபலியுமின்றிவெம்பசியுடற்றவோயநது
கன்றினன்சைவமல்லாக்கடும்பரசமையம்போலச்
சென்றுசேர்நெறியொன்றில்லாக்கானிடைத்திகைத்துநின்றான். ௬அ

வேறு.

வாட்டானைவிழியார்க்குவருந்துவான்வனத்திலுயர்
வாட்டானைபுவியார்க்கவருநதிறன்மாதர்முலைக்
கோட்டானைத்துணைமேவிக்குளறுகுரல்கேட்டுவப்பான்
கோட்டானைத்துணைமேவிக்குமுறுகுரல்கேட்டயர்நதான். ௬௯

ஈனக்கள்ளிகள்பாலுமிடுஞ்சோறுமிதழ்க்கனிவாய்ப்
பானக்கள்ளுடனேநதப்பரிவாயுண்டுறஙகுவான
கானக்கள்ளிகள்பாலும்பொறிசோறுங்கடிமலர்வா
யூனக்களுடனேநதவுண்ணான்மற்றுறஙகானால். ௭௰

வீங்கிவளர்ந்ததுதிமிரம்விருத்திராசுரனெய்ப்ப
வோங்குமுமிக்கண்ணுகவிகதிரவெழுந்ததுவான

மாங்கசுரன்போயொளிப்பவுந்தராதன்கரத்தில்
வாங்குமொருவச்சிரம்போல்வானிலெழுந்துபுரிதி. ௭௧

வேறு.

வடிந்திடத்திமிரவெள்ளம்வளர்ந்திடப்பரிதிகாணிற்
படிந்திடுமாத்திரேயனபடருறுவினையோநோயோ
முடிந்தானதுவோவென்றுமுடிவிலாப்பிறப்போவெல்லாம்
விடிந்ததுவிடிந்ததென்னவிடிந்ததுகங்குற்கானம். ௭௨

விடிந்ததென்றெழுந்துபோவனமெய்களைத்தயர்ந்துசோர்வ
னடர்ந்தகலவிடறிவீழ்வனடியிடச்சுவியிலாதே
முடங்குவன்மரங்கடோறுமுட்டுவனெட்டியேகி
கடந்தனன்திருக்குற்றாலநகர்க்குயோசனைக்குஞாங்கர். ௭௩

வேறு.

கடிக்கொண்டபூங்கோதைக்கணிகையர்க்கேகாதலனாய்க்
குடிப்பண்பின்மடவாளைக்கொடுஞ்சிறைசெய்பாதகத்தான்
மிடிக்கொண்டுவெறுந்தனியாய்வெயிற்கானறபால்வீழ்ந்து
பொடிக்கொண்டதழல்விழும்புழுப்போலத்துடிக்கின்றான், ௭௪

உண்ணாதுபசிதுரப்பவுடலெல்லாம்பிணியுலைப்பப்
புண்ணாகமெய்யயர்காற்போறறவொருதுணையின்றி
யெண்ணாதடலவெண்ணியிளைத்திருமிவாய்குளறிக்
கண்ணாருமொளியிருண்டுகாதோசையுமடங்கி. ௭௫

தருணநிலைதடுமாறிச்சாக்கிராஞ்சொறபனஞ்சுழுத்திக்
கருவிகரணங்களெலாங்கைகடந்துமெய்யயர்ந்து
துரியவவத்தையில்வீழ்ந்துதுரியாதீதங்கடந்தே
யுரியதொருசூக்குமத்தாயுயிரொடுங்குமந்நேரம். ௭௬

அறநெறிமுற்றவப்பயனாலத்திரிகோத்திரமறையோ
ருறுகதிமெய்த்தவப்பயனாவுயிர்விடும்வேதியனுடலிற
குறுமுனிக்கன்புடையபிரான்றிரிகூடக்குலவரைவாய்ச்
செறிமலர்ச்செண்பகச்சோலைதென்றறகால்பாய்ந்ததுவே. ௭௭

மால்பாய்ந்தமறையவன்மேற்றிரிகூடவரைவசந்தக்
கால்பாய்ந்ததென்கேனோகவுணியன்வாய்க்கவுரிமுலைப்
பால்பாய்ந்ததென்கேனோபவக்கடலிற்குகப்பெருமான
வேல்பாய்ந்ததென்கேனோயாதெனயான்விளம்புகேன். ௭௮

இந்தவகையிறநாளையியமபடரொகிர்முடுகி
வந்துநெடுவலைவீசிவளைந்துபெரும்பாசத்தாற்
பந்தமுறக்கட்டியொருபட்டமரந்தளிர்த்ததெனச்
சிந்துதிரமெழப்புடைத்துத்தென்புலத்துக்கொடுசெல்வார். ௭௯

செல்லுகின்றவேலைதனிற்சிவபிரான்கணநாதர்
தில்லுமெனத்தூதர்தமைநிராகரித்தும்மறையோனை
வல்லுதிரக்கறைதுடைத்துவன்பாசமறுத்துநயஞ்
சொல்லுவனபலசொல்லிச்சூட்டுவனபலசூட்டி. அம்

அரமகளிர்கவரியிடவந்தரபல்லியங்கறங்க
வரியிசைக்கின்னரர்பாடவானவர்பூமழைபொழியத்
புரிசடைப்பண்ணவர்புகழபுட்பகத்தின்மீதேற்றிக்
கரியுரிவைதரித்தபிரான்கயிலைதனிறகொடுபோனார். அக

வேறு.

செம்மானமிசையிழிந்துசென்றுமறையோன்கயிலைச்சிகரமேவிப்
பெம்மானையடியினைமிசைமுடிபணிந்தானந்தவெள்ளப்பெருக்கிலாடிக்
கைம்மானுஞ்சுடர்மழுவுங்கறைமிடறும்புரிசடையுங்கண்கண்மூன்று
மெய்ம்மானுந்திருவடிவுங்கண்டிருகண்களிப்பவுடல்விதிர்ப்பினான. அஉ

சென்றுதொழுமந்தணனையருணோக்கிறகயிலைவளர்சிவபிரானார்
ஈன்றுநீயுயிர்விடுகானமதுசெண்பகாடவிசோநறும்பூந்தென்ற
லொன்றியுனகாகமிசைதவைரலாறபாவமெல்லாமொழித்தோங்கண்டா
யென்றுமழியாமலினியெமதுகணத்தவர்பததிலிருப்பாயென்றார். அங

வேறு.

அன்றுநாகனாதிருவருள்செய்ததான்
மன்றனமாலயனவாழவுமுவர்ப்புறச்
சென்றுசெலவச்சிவகணததாருட
னொன்றுநீகலாபபேரினபமெயதினான. அச

o யாமியந்தனிலெய்தியூதுவர்
சாமியநதகன்றுளினைபோறறியே
காமியநதணனகண்ணுதலபாலுறறான்
பூமியநதரம்போறறிடப்போயெனறா. அரு

வெய்தவாறுடைவீணைத்தென்புல
மெய்தவாறுகொண்டேகலுமேதடை
செய்தவாறுஞ்சிவபெருமான்றெண்டர்
வைதவாறும்வளர்செவிசாறறினார். அசு

செறிவுசேர்மனத்தென்புலக்கோமகன்
குறிகொள்சித்திரகுத்தனைக்கூவியே
வெறிகொள்விப்பிரன்மேற்கணக்காலுள
பொறிகள்யாவும்புகலுதியென்றனன். அஎ

---

o யாமியம் – தென்றிசை.

சாத்திரம்பலதான்கற்றுமத்திரி
கோத்திரத்திலுயர்ந்துநலநெறி
னேத்திரத்தொழில்வீக்கிவைசியர்க்குஞ்
சூத்திரர்க்குங்கடைஞரிற்றோன்றினான். ௮௮

கற்புமங்கையர்கட்டழித்தான்பொரு
ளற்புமாந்தரடைக்கலம்வெஃகினான்
பொற்புறாதர்புறங்கடைநின்றுளா
னற்புமாந்தர்க்குநண்ணியதீமையான். ௮௯

சாலைசத்திரந்தன்மமலைத்துளா
னாலயத்தின்களவுகையாட்டியான்
மாலைகாலையுஞ்சந்திமறந்துளான்
வேலைதோறுமதுநுகர்வேட்கையான் ௯௰

குருவுந்தெய்வமுநிந்தைசெய்கோளினன்
கருதுநோன்புடைக்கன்னியர்காமுகன்
றருமயோகர்தவங்களழித்துளான்
பொருவினமோகப்புலைச்சியர்போகத்தான். ௯௧

அந்தணர்க்கோரருங்கலைமூவகைச்
செந்தழற்குத்தெறும்புனல்நிந்தைசெய்
மந்திரத்தின்மறவிபிறரொலா
நிந்தைசெய்யுநிரக்கரகுக்கியான். ௯௨

பிறந்தநாட்பிதுர்நாள்வருடாதியிற்
சிறந்தநாட்சிவராத்திரியாதியா
வறைந்தநாள்விரதாதிமுச்சந்தியு
மறஞ்செய்வாள்விழியாளைமறந்திரான். ௯௩

அலைவிலாதகுடிகளலைத்துளான்
மலர்செய்காவின்மரங்கள்குறைத்துளான்
புலைசெய்பான்மையும்பொய்களவாதியுங்
கொலைசெய்பான்மையுங்கூறத்தகாதவால். ௯௪

இரும்புபோலுமிதையத்தன்கள்வெறிச்
சுரும்புபோல்பவன்கோபச்சுடரனு
னொருங்குபாவத்துடன்பிறந்தானற
மிருந்தவூரிலிருந்தறியானென்றார். ௯௫

கரணவீரர்கணக்கிலவைகூறலு
நரகவீரனைநல்வழிசேர்த்திடும்
வரவியாதெனமாமனத்தெண்ணினான்
றிரமதாநபேச்செய்யுஞ்செங்கோலினான். ௯௬

ஆரவமாலையவிர்சடையாரிடைப்,
பரமராசியம்யாதுபயந்தோ
பிரமன்மாலறியாதபிரானுடன்
விரைவில்விண்ணப்பஞ்செய்திடவேண்டுமால். கஎ

செப்புமேலவைச்சிவபெருமான்முறை
தப்புமேல்வைத்தகல்வதுதாக்கெனு
வெப்புமேல்வைத்தவெம்பகடேறினான்
கப்புமேல்வைத்தசூலமுங்கைக்கொண்டான். கஅ

பாசதண்டமெழுக்கரபத்திரம்
வீசுங்கைவலையெஃகம்விறனமழு
மூசுசம்பமுசலங்கணையம்வாட்
பூசல்வீரகொடுபுறஞ்சுற்றினார். ககூ

காலனும்பெருங்காலமிருத்துவு
மாலவுக்கிரனாரன்முகனுதியா
நீலமேனிநிரைத்தெழுந்தரு
மோலமெனனவொருபுடைசுற்றினார். உ௦

விளங்கும்வைவைச்சுதபுரமேவினார்
துளங்கியோர்புடைசூழ்ந்தனர்சூழ்திறை
யளந்துபோற்றினர்தானவராதியோர்
வளர்ந்துஇங்கராமல்லர்களாடினார். உக

பெருவியாதிமுயல்வலிபீனிசங்
குருமகோதரங்குட்டங்களாதியா
மருவுசேற்றும்வாதபித்தகைளும்
பொருவுசேனைகளாய்ப்புடைசூழ்ந்தவே. உஉ

வெட்டுவார்துணிப்பார்மிகுபாவரைக்
கட்டுவாரடிப்பார்நரகாதிபர்
இட்டுவார்பணிகேட்பவராய்நமன்
மட்டுவார்கழல்வந்துவணங்கினார். உங

ஆயசேனைக்கடலிடையநலார்
தூயசாமரைத்தெண்டிரைதுள்ளுறப்
பாயுமோதையிற்பல்லியமார்த்தெழ
மேயவூர்தியன்வங்கத்துமேயினான். உச

சொந்தவைவைச்சுதபுரநீங்குபு
வந்துசேர்ந்தனனவைதரணித்துறை
யுந்துதானையைநோக்கினனொண்கயல்
பந்திசேர்தருபல்சினைநோக்கல்போல். உரு

பாங்குசேர்பரிவாரத்தொகையெலா
நீங்குகென்னநிறுத்திவெங்காலனை
யாங்குகூவியமைச்சனோடேகியே
வீங்குசோதிக்கயிலையைமேவினான். ௯௬

நீலமால்வரைநினறிழிகொண்டல்போற்
கோலமேதியிழிந்துசெங்கோற்கிறை
காலனோடுசயிலையஞ்சாரல்வாய்ச்
சூலமேந்தித்தொழுதெழீஇப்போயினான். ௯௭

வேறு.

சென்றுவெள்ளியந்திருமலைத்தென்றிசைகாத்திடும்வடமேருக்
குன்றுபோலுயர்கோபுரவாய்தலிற்குறுகிவிண்ணவரொல்லா
நின்றுபோற்றுபொற்படிமிசைத்தெனபுலநிருபனவெம்மனக்கோட்ட
மன்றிநின்றுதன்வரவினையருங்கடைகாவலர்க்கறிவித்தான். ௯௮

கடைகளேழினொருவர்பாலொருவராய்க்கழறிமறறவர்பூதப்
படைகள்காவலர்க்குணர்த்திடவன்னவர்பணவரவணிகோலச்
சடைகுலாமுடிச்சூடாமழுநந்திநந்தலைவனுக்கமைநதோத
வுடையநாயகன்சன்னிதானத்தவனுணர்த்தலுங்கொணாகென்றான். ௯௯

நந்திநாயகனருண்முறைசிவகணநாதர்கள்புகுநதுய்ப்பப்
பந்தியாம்பலதிருக்கடைகடந்துமேறபடர்நதுதென்றிசைவேந்தன்
புந்தியார்ப்புறக்கண்டனன்சிவபிரான்பொன்னணிதிருக்கோயின்
முந்தியாரணர்நாரணர்பெறவொணாமுறைமைபெறறனனென்றான். ௱

வேறு.

கின்னரர்கின்னரமிழற்றத்தந்திரர்தந்திரிமீட்டிக்கீதம்பாடப்
பன்னகர்கிங்கிரர்கருடர்சித்தர்வித்தியாதரர்தம்பணிசெய்தேத்தப்
பொன்னகரிந்திரன்பரவவானவர்பொன்மாரிபுட்பமாரிதூவப்
பின்னகபந்திகளசைப்பவரம்பையர்கண்மணிக்கவரிபிடிபபமாதோ. ௧௱௧

புவலோகர்வலம்புரியப்பாதாளலோகர்மணிப்பொற்பூணேந்தத்
தவலோகர்சனலோகர்சத்தியலோகரும்பணிந்துதவப்பேறெய்திப்
பவலோகங்கடந்தேறமாலோகத்தவர்பரமபதமேயான
சிவலோகநதனைவேண்டியடியரவச்சிவகணங்கள்சேவைசெய்ய. ௧௱௨

அணுமாதிசித்திகள்குற்றேவல்செயவீசானனடைப்பைதாங்க
மணிவாரியோரேழுந்திறையளப்பபகல்வேநதர்மாறுத்தீபம்
பணிமாறமதிபடிமக்கலமோதமழைதெளிப்பப்பவனன்றூர்ப்பத்
தணியாதத்தழற்கடவுள்பரவியாலத்திசுற்றத்தருமம்வாழ்த்த. ௧௱௩

அறுசமையமைம்பூதநான்மறைமுக்காலமிரண்டறங்கள்யாவு
மெந்தழ்வலிகள்வேண்டியொருகோடிவரமந்திரங்களெண்ணில்கோடி

மறுவற்றின்றிருகோடிபுகழ்ந்தேத்தவரிபிரமர்மகுடகோடி
செறிகமலத்தாள்வருடப்பதிஞெருமுக்கோடியராங்தேவர்போற்ற. ௱௰௪

கங்கைசரசோதிசிந்துயமுனைகோதாவிரிநன்மதைகாவேரி
மங்கலமாநதிபலசாமரையிரட்டவிமையவரைவயிறுவாய்த்த
நங்கையொருபாலிருப்பப்பொருப்பெறிந்தவேற்குமரனுவெண்மேவ
வெங்கயனையமர்சாய்த்தவிசையமதக்களிறொருபால்விளையாட்டெய்த. ௱௰௫

மாணிக்கமரகதங்கோமேதகமுத்துபவளம்வயிரநீல
நீணித்தமணிபுருடராகவயிடூரியங்களிழைத்ததுணி
ஞணிப்பொனமேருவெனவுயர்மணிமண்டபத்தரியாசனத்தினமீது
வேணிச்செவ்வான்படரமதிதவழுமொருபவளவெற்புமான. ௱௰௬

ஒருமருங்குமிருசருமத்துகிலுடையுமுனறுகண்ணுமுயர்தோணான்கு
கருணைபொழிதிருமுகமுமைந்துபணிவிமுடிமேறுகங்கையாறும்
பருதியெழுவெயிலெறிக்குமவுலியும்வெண்ணிலவெறிக்கும்பணிலத்தோடும்
பொருமுரகுண்டலமுமண்டலமும்விண்டலமும்பொலிந்துளானை. ௱௰௭

கரதலமுமான்மழுவுமபையவரதமுஞ்சுருதிகனிந்தவாயு
மரவணியுமுரகணகங்கணமுங்காண்டொறுமற்புதமேற்கொண்டான்
திருவடியுங்குழைகழலுமிடம்வலங்காண்டொறும்பயமுந்திடமும்பூத்தான்
பிரமனமால்சிரமாலைதுயல்வருதிண்புயநோக்கிப்பிரமைபூண்டான. ௱௰௮

முதிரவானவர்கணமாம்பரவையிடைமுழுமணியாசனமென்றோங்கு
முதையவரைதனில்னாதகோடிகதிரோருருக்கொண்டுசித்தாலென்ன
வதியுமுயர்பரஞ்சுடரைக்காண்டொறுங்கண்வழுக்கியன்பின்வழிக்கொண்டேகித்
துதிபரவியெழிற்கடவினருட்டுறைவீழெழிலியெனத்தொழுதுவீழ்ந்தான். ௱௰௯

ஆதியாய்சரணமநுபூதியாய்சரணமகிலாண்டமீன்றாள்
பாதியாய்சரணமறைவேதியாய்சரணமருட்பரமானந்தச்
சோதியாய்சரணமெனவீழ்ந்தானையெழுகவெனச்சுருதிநாதன்
மேதியான்முகநோக்கிவந்தகாரணம்யாதுவிளம்பாயென்றான. ௱௨௰

எனறுமுதலவன்றிருவாய்மலர்ந்தருளப்பெற்றேனென்றிருகைகூப்பிச்
செனறுதுணையடிவணங்கிவணங்குதொறுமுடல்விதிர்ப்பச்சிலிர்ப்பரோம
மினறுசெழுந்துகிலொதுக்கிவாய்புதைத்துநடுநடுங்கிவிமலமூர்த்தி
யொன்றுளதென்னேனுவிண்ணப்பமெனவுரைத்தருளாலுணர்த்துகின்றான். ௱௨௧

பாரின்மேன்மறைக்குலமாம்பயிர்க்குமுதுகளையாகப்படர்ந்தானந்த
வூரினமேனுதிக்குமுனம்பாதகத்திலுடனுதித்தானெழுக்கந்தீர்ந்தா
னீரினமேறகுளித்தறியானமாதர்முலைத்தடங்குளிப்பானீசமாதர்
காரின்மேனியுநதீண்டியவர்மனைபுக்கூனருந்திக்கள்ளுண்பானால், ௱௨௨

ஞானமறியான்மூன்றுசந்தியுமறியானலதுசாமவேத
கானமறியாரோடுமக்கனலுமறியான்மனுநூற்கல்விகேள்வி
மானமறியான்செபமுமந்திரசித்தியுமறியான்மவுனயோக
ஞானமறியானிவனோநாங்களறியாப்பதத்துநண்ணுவானே. ௫௨௩

கோடுபொருமுலையார்கள்காமத்தாற்புலைபுரிந்தகொடியோன்றன்னை
வாடுபெருந்துயர்நீக்கிக்கயிலைதனிற்சிவகணத்தார்வரித்தாரன்றோ
ராடுவதுதிருக்கூத்தாயதுதானேயலங்காரமாகுமானால்
வீடுபெறுசுவர்க்கமென்றுநரகமென்றுமெங்கனுடன்விகற்பிப்பானேன். ௫௨௪

வைதப்பொழுதுபாவமெலாமினிப்பொழுதுகடந்தானைக்காட்டும்போது
தப்பொழுக்கணநாதர்தள்ளினொனிற்பாவந்தருமமேது
பொய்ப்பொழுதுகழிப்பாவியலைத்துநான்மெலிவதினிப்போதுமெந்தா
வெப்பொழுதுங்கயிலையினுனடியவர்க்கேபணிவிடைசெய்திருப்பேனென்றான்.

தக்கவேதியன்றவமுஞ்செய்ஞூர்மறையவன்பாதகமும்பூசை
புக்கமறைப்பாலகன்வாணாளழிவுமுப்புரநாட்பொலிவுமாறறு
மிக்கதிருச்செயல்களினும்விதிமுறையைநிலைநிறுத்தும்விளையாட்டாலே
முக்கணுயசர்ந்நறுமணமுகநோக்கிக்கருணையுடனமொழிவதானார். ௫௨௬

மூந்தக்கால்சிவதலத்துத்திரிகூடமான்மியங்கண்மொழியுநாளிற்
சந்தக்காநெடுவேலிச்சண்பகக்காமகிமைசொன்னோந்தனித்தக்காலே
மந்தக்கான்மகிமைசொல்லவைத்திருந்தோமினியதனைவழங்குவோம்யா
மந்தக்கான்மகிமையைநீயறிந்தக்காலிவன்மகிமையறிவாயென்றும். ௫௨௭

விளையாடுந்திரிகூடக்கடவுண்மால்வரைதந்தோணறிச்சிரிந்தேன்கங்கை
யுளையாடிப்பொன்குசடற்பாலாடிவடவருவியமிழ்தமாடித்
தளையாடிமடலவிழ்க்குஞ்சண்பகாடவிதவழ்ந்துசகசக்கோயில்
விளையாடியெம்மருகில்விளையாடுந்தென்றலங்கால்விளையாட்டேயோ. ௫௨௮

மலையாறுகடலலைந்துமண்டிபுடார்ச்சுனபுரத்துமாய்வோர்தீமை
மலையாமனுமிருந்துமறைப்பொருளைவலக்காதில்வழங்கும்போது
மலையாட்டிகவுரிகுழல்வாய்மொழிசெங்கையிலணைத்துமடிமேலேந்த
மலையாமலிளைப்பாறறிவிசுவநாதரிகூடவசந்தக்காலே. ௫௨௯

தீர்த்தமகிமையிலதிகாதிரிகூடவடவருவிதிருக்குற்றால
மார்த்ததலங்களிலதிகமூவடிவாஞ்சிவலிங்கமருளானந்த
மூர்த்திகளிலதிகமிவைசாலோகமுதன்மூன்றுமுறையேநல்குங்
கூர்த்துரைக்கிலிவைமூன்றுமத்தலத்திலுலவுதென்றல்கொழிக்குமாதோ. ௫௩௰

மஞ்சுதோய்முதுகுடுமித்திரிகூடமலைச்சாரல்வசந்தனூதை
அஞ்சுபோதையினமேனிதைவரலால்வானெழுந்தகுறைக்காற்றிற்
பஞ்சுபோன்மறையவன்செய்பாதகம்போய்ச்சிவதருமம்பலித்ததாலே
தஞ்சமாமுயர்கயிலைவரைமேவியெழுதுபதஞ்சார்ந்தானன்றே. ௫௩௧

ஆதலாலெமதுபுடார்ச்சுனபுரத்திலெழுதினைத்தேனுறுவாயுங்
காதலாமைக்கிணைநாற்றிசைமூன்றியோசனையுங்கலந்துவாழ்வோர்
சாதலரம்பொழுதிருபாலுயிரிடத்துமொருநாளுந்தருமவேந்தே
போதலாவதுதவிர்த்துதர்யாவருக்குமிதுபுகல்வாயென்றார். ௱௯௨

இன்னபடிகயிலைமலையெம்பிரானருளியவாறியமன்கேளா
முன்னமிதையறியாதுசெய்தமையைநினைந்திரங்கிமுதுர்தனுளும்
பன்னரியமறையாலுந்தெரிவரியபரமராசியத்தின்பான்மை
மன்னுபெருந்திரிகூடதென்றலங்காண்மகிமையெனமகிழ்ச்சிகூர்ந்து. ௱௯௩

பின்னலணிபிறைமவுலிச்சடையினாடிபரவிப்பெம்மானெம்மான் [றித்
சொன்னபணிவிடைதலைமேற்கொண்டனனகொண்டனனெனவேதொழுதுபோற்
தனகர்க்குநம்பெருமான்விடைகொடுப்பப்பகட்டேறித்தருமனபோந்து
நன்னகர்மாதாநிலத்துமகிமையையவருக்குநவில்வதானான். ௱௯௪

தருமமேதங்குபுடார்ச்சுனபுரத்துமூன்றியோசனையின்மேலும்
வருமமேமறந்துமினிதூதர்காளவணுறைவோர்வருவோர்யாருங்
கருமமேதயர்றுகினுந்தருமமேகுறிக்கொண்மெனக்கணக்கர்யார்க்கும்
பருமமேதியையுகைக்குநடுநெறிச்செங்கோறகடவுள்பகர்ந்தனமனே. ௱௯௫

பாராதுமறையவனசெய்மாதகாதீர்த்தருள்புரிந்தபரிசீதென்று
வாராதவழிகாட்டுமந்தமாருதமகிமைவழங்கிச்சூழன்
நீராதசிவதத்துரோகதீர்த்தமகிமைபுனைசெய்வாயெனவு
மாராமைமுனிவரர்க்குத்தக்கன்மகம்புரிதன்முதலறைவதானான். ௱௯௬

௰௨ - வது - மந்தமாருதச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௯௱௰௬.

---

## ௰௩ - வது - தக்கன்வேள்விச்சருக்கம்.

அலர்க்கமலாறும்பொகுட்டிலயன்றலைநாளுலகமெலாமளிக்கவேண்டி
முலைத்தலத்திலறத்திறைவனமார்பினிடைப்பிருகுளத்தினமுதமரீசி
புலத்தியனத்திரிகிருதுவங்கிராச்சனபதிமேறபுலகனறேனை
வலப்பதத்திற்றக்கனமுதலாயதசப்பிரமனாயுமரபினீன்றான. ௧

அன்னவராம்பதின்மர்களிற்பின்னவனுந்தக்கனெழுந்தயன்பாலெகிப்
பின்னமிலாதுயிர்க்குயிராய்நிறபவனுஞ்சிறகுணனும்பெருந்தேவர்க்கு
முன்னவனுமிறுதியிலாமுதல்வனும்யாவெனக்கேட்பமுளரிமேலோ
னுன்னரியானுணர்த்தரியானிருவர்களுந்தேடரியவொருவனென்றான். ௨

படைப்பதுவுங்காப்பதுவுமுனைர்நீர்புரிந்திருப்பப்பரிவாற்பினர்த்
துடைப்பவனைமுதல்வனைச்சொன்னவாறெனவேயெனச்சுதன்விள்ள
வுடைபபிரமமாசவனேயுலகொடுக்குநாளைமையுமொடுக்காநிற்பா
னிடைபபரன்பினருளியனறேயாநகண்படைப்பதுங்காப்புமென்றான்வேதன்.

காரணனையுனைப்பூதவகையையுயிர்த்தொகையையெல்லாங்குவேதம்
பூரணமாம்பிரமமெனப்புகல்வதெவனென்றுதக்கன்புகலவேதா
வாரணம்பரமனுரையுண்மைமொழியவற்சேமற்றவர்கட்கெல்லாங்
காரணமாமுகமனுரைவேந்தனையுமீசனெனல்கடுக்குமென்றான். ௪

ஆங்கவனோர்செயலுடையன்வடிவுடையனுதலினுலவனுக்கென்றும்
பாங்குபெறுந்தோற்றமீறெய்தாதோவெனுஞ்சேய்க்குப்பதுமத்தண்ணல்
யாங்குமுளன்யாங்குமிலனருவுமிலனுருவுமிலனெம்மானம்மா
வோங்குலகின்பொருட்டாகச்செயல்புரியக்கருணைதிருவுருவாக்கொள்வன். ௫

உயிர்கள்புரிவினைக்கீடாயுருவகுக்கவேண்டிலனதுருவமாவன்
செயிரறவேவினைப்பயன்களூட்டுதற்குமால்வனசுதைப்பானவேண்டி
னயில்பெறுமுத்தலைச்சூலதாரனுவன்யாவுமறைத்தருளும்பான்மை
பயின்மகேசனுமாவன்சதாசிவமாயருளபுரிவன்பரமமூர்த்தி. ௬

வின்னாமையருவாகியருவுருவமாகியுருவமேவாநிற்பன்
றன்னாமையுருவகத்தும்யாங்களிருவருமாகித்தானவேறுவ
னெள்ளாருந்தயிலமும்பூமணமுமணிச்சோதியும்போலெங்குந்தானே
யுள்ளாகிப்புறமாகியசம்புறமுநீங்காதவொருவனுவன். ௭

மாதவனேபிரமமெனறும்யான்பிரமமெனறுமதிமயங்காவண்ண
மீதெலாமெம்போல்வார்வெண்டலைமாலைகள்புனைந்தான்விமலமூர்த்தி
யீதெலாமுணர்ந்துணராமாலாகிமாலுடன்யானிகலுங்கால
நாதனெதிர்விலக்கியனறோநாங்களடிமுடிதேடநடுநின்றனே. ௮

மூவராகினைந்தரியையென்னையரனறக்கிணையாமொழிவர்யாரும்
பாவராய்த்தாந்தமையேகெடுப்பதனறியெமக்குமவர்பலகவராவார்
சேவினுனனபரோனநினைப்பவர்க்கேயாங்களருள்செய்யாநிற்பே
மேலராகிலும்யாரையிறைவரெனவிறைஞ்சன்முக்கண்ணிறைக்கேசாரும். ௯

கவ்வைதீர்ப்பலகோடிநதிகளுக்குஞ்சாகரமேகதியாம்போல
வெவ்வகையாகியசமையநெறிக்கெல்லாமிறைவன்முக்கணெம்மானன்றே
யவ்வகையாயிரமறைகளுரைத்தும்யாமுணர்ந்தநயுநீயறியாயையா
கவ்வியணிகரத்தானைப்பரவியருள்பெறுகவென்றனனினத்தோனே. ௰

வேறு.

சதியின்மேற்பெருவிதிமொழிசிறுவிதிகருதா
மூதியநாயகனரனெனிற்பணிந்துமான்முதலோர்க்
கதிகளுமெனும்வினையமுள்ளமைத்தருந்தவஞ்செய்
புதியதானம்யாதெனனுமலரில்வாழ்புத்தேள். ௰௧

அநாதமானதங்குணர்வருமேருவினணித்தா
நந்தமான்றத்தடம்புனன்மூழ்கிநம்பானை
மூந்தமானதவருச்சனைமுதற்றவமுயன்று
சொந்தமானதற்பானடிசேரொனச்சொற்றான். ௰௨

வேறு.

பூந்தவிசிலயனுரைத்தபோதுமானதத்தடத்துப்போந்துதக்க
னேந்தவமோராயிரம்யாண்டியற்றுதலுமுயர்விடைமேலாதிதோன்றிக்
கூர்ந்தபெருந்தவமுவந்தேமிகுனக்குவேண்டுமவாங்கூறுயென்னப்
பாந்தளணிசெஞ்சடையார்பவளவாய்மலர்ந்தருளப்பணிந்துபோற்றி. ௰௩

மேகபதமுதலாயவிசும்புலகுமால்பதமும்விரிஞ்சனாடு
நாகருலகமும்புவியுமெண்டிசையுமெனதாணைநடப்பநாளும்
பாகசாதனன்முதலாவுனைப்பணிவோர்யாவருமென்பணிகள்கேட்ப
மாகனசுற்றமும்வாழ்வுமக்களுஞ்செல்வமுமழியாவரமும்வேண்டும். ௰௪

சுந்தரியுன்னிடத்துறையுந்தோகையுமென்மகளாகத்தோன்றநீபோ
ரந்தணன்போல்வந்தருளிமணம்புரியவேண்டுமிவையருளாயென்னப்
புந்தியுறவனைத்துதலும்புகன்றவரமனைத்துமருள்புரிந்துமேலுஞ்
சிந்தையுறநன்னெறிநீநிற்கிலிவைநிற்குமெனமுன்றேவதேவன. ௰௫

வரமனைத்துமழவிடையாரருளியெழுந்தருளியபின்மதங்கூர்தக்கன்
பிரமனைத்தனிடத்தில்வரவுன்னுதலுமவனுணர்ந்துபெருஞ்சீர்முத்திப்
பரமனைக்கண்டிவ்வாறுபெற்றனையானபணித்ததொன்றும்பயின்றனல்லன்
றரமனைக்குளமுதாட்டிவளர்த்ததாலுமகாளமனதித்தருமோகாகம். ௰௬

சிற்றறிவற்கினிதுரைக்குநன்மொழிகண்மென்மூளைபோற்சிதைவாமென்று
முற்றறிந்தநான்முகன்போய்மைந்தனவையகத்திசைந்தமுகமன்கூற
மற்றவனைக்கமலயன்போலவனைநகருமுறைபதயும்வகுப்பாயென்றான்
பெற்றவனைப்பெரியவனைத்தெரியுமோசிறியவற்குப்பெருக்கம்வந்தால். ௰௭

தாலமிசையயனைவகுத்ததக்கமாபுரியிடத்துத்தக்கன்மேவி
மாலயனுமுறைபுரியவாசவனும்பணிகேட்பவானோர்போற்ற
நீலவிழியரமகளிர்கவரியிடவிரைமணிப்பூண்மகுடஞ்சூடி
மேலரியாசனத்திருந்தானவேந்தர்வேந்தாய்விதிக்குவிதியாயமாதோ. ௰௮

வேறு

ஓரசுசெய்காலந்தன்னிலயன்மலர்ப்பதத்துத்தோன்றும்
விரைசெறிகுழலாள்வேதவல்லியைவிரும்பிவேட்டுத்
தரைதனிற்புதல்வராயிரவரையிருகாற்றந்தா
னுரைசெய்நாரதனாலன்னோரொழிவிலாமுத்திசேர்ந்தார். ௰௯

பாலரைமுத்திசேர்த்தபான்மையான்முனியைத்தக்க
னேலநீர்ப்புவனந்தோறுமுழன்றிடச்சபித்துப்பின்னர்
சீலவார்கூந்தலம்பானேரிழைச்சனத்தையீன்று
சால்புசேர்சுபுத்தியாதிபதின்மூவர்தருமற்கீய்ந்தான. ௨௰

அரிவையர்பதின்மர்தம்மிற்பிருதியுங்கிராவுககாக
மரிசிசம்பூதிவேட்பவுற்சைசையைவசிட்டனமேவக்

கிருதுவேகமையைவேட்பக்கியாதியைப்பிருகுமேவப்
பொருகனற்சுவாலைநண்ணப்பிரீதியைப்புலகன்வேட்ப, ௨௧

வுத்திசாசனதிமாதைப்புலத்தியன்மணப்பவாய்மைத்
தத்தையாமனசூயைக்குத்தலைவனத்திரியேயாக
வித்தகக்கியாதிமைந்தன்விதாதாவேசுவதைக்காக
வத்திரிமகவான்சோமனசுபதிமுதலோர்க்காக. ௨௨

தார்முடிச்சுவதையின்றவிருவரிற்றரணிதன்னை
மேருவேமணப்பவாட்கண்மேனையையிமவானவேட்ப
வார்முலைத்தரணியின்றமேலையைவருணன்வேட்டா
னாரமுதனையாரீன்றமக்களுமனேகர்மாதோ. ௨௩

வேறு.

இங்கிவரிறகாசிபனையீன்றனன்மரீசிபுலத்தியன்சீர்மைந்தர்
பொங்கிராக்கதர்கவிகள்கின்னரர்கிம்புருடர்முதற்பலகளீன்றோ
ரங்கிராச்சனபதிகள்கந்திருவர்வசுக்கடமையளித்தாராங்கே
வெங்கலியைத்திருவையவுணரைப்பயந்தான்பிருகுவென்னவிளம்புமேலோன். ௨௪

அன்னவரிற்காசிபன்பின்றக்கனருள்பதின்மூவரணங்கார்தம்மை
முன்னர்வேட்டனனவரிலதிதியாதித்தர்தமைமுறையினீன்றாள்
பின்னிரணியனிரணியாக்கனையுந்திதிபயந்தாள்பிரகலாதன்
பொன்னவன்சேயவன்மகன்விரோசனன்மாவலியவன்சேயபுதல்வன்வாணன்.

காலகேயரைப்பயந்தாள்காலையாயுவுமசுரர்கணத்தையீனுண்
மேலையோர்நால்வரொடுகலுழனையுமருணனையும்விநதையீன்று
ளாலவிழியரம்பைமுதறபனனிருவர்தமைப்பயந்தாளரிட்டைமூவாக்
கோலராகுவைப்பயந்தாள்சிங்கியைகத்துருநாகக்குலத்தையீன்றாள். ௨௬

சம்பரனேமுதலாயபனனிருவர்தானவரைத்தனுவுமீன்றாள்
கொம்பினிலங்கிளைகபிலையிருவருமேகந்திருவக்குலத்தையீன்றாள்
வெம்பரிதியிந்திரியம்பாரிமூங்கிலில்விடுப்பவிரண்டுகோடி
யும்பர்மருத்துவர்பிறந்தார்பிறந்தனசராசரங்களுலப்பில்கோடி. ௨௭

எண்கிளையாவாண்மகப்பெற்றெனப்பெற்றாருயிரத்தினிரட்டியோரும்
விண்கிளையாவீடுபெற்றார்மீட்டுமகளிரைப்பயந்தவியப்பாலோங்கி
யொண்கிளையாய்மலைகடலும்பாதலமும்பூதலமுமுயர்வானும்
பெண்கிளையாற்சிறுவிதிக்குப்பெருங்கிளையானதவத்திறபெரிதொன்றுண்டோ.

வேறு.

அத்துணைவாழ்வுமீசனருளெனவுணரான்றனயாற்
சித்தெனவகந்தையேறிச்சிறுவிதிபெருமால்பூண்டா
னெத்துணைகற்றோனுமிருவகைச்செருக்காலயார்க்கும்
வைத்தநோயறுமோமுக்கண்மருந்தையுட்கொள்வார்க்கன்றி. ௨௯

மகக்குழாத்திருபானேழ்பெண்மக்களைமணஞ்செய்சோமன்
முகத்தெழிலாரல்பாலுமுலையெழிலுரோணிபாலு
முகப்பினாலேனையோர்பாலொருவினைதனைக்கேளாத்
தகைப்பெருமதியைத்தேய்விதிமக்கன்சாபஞ்செய்தான் ௯௰

புதியவானமுதமீய்ந்துபுலவரைவளர்ப்பான்மேனி
திதிதொறுந்தேய்வதானுஞ்சிறுவிதிசாபந்தீரா
னதிபொதிபவளவேணிநாதனாரடியாரன்றி
விதிதனைமதியினாலேவெல்லவும்வல்லாருண்டோ. ௯௧

பான்மதிதேய்ந்துமேனிபழுதுபட்டுழன்றுவானோர்
கோனவைகுறுகிக்கூறக்கொழுங்கனல்கரியாவேட்ட
தேனாக்கோரஞ்செய்தசிறுமையாற்பெருநோய்பூண்டாய்
மேனெறித்தக்கன்சாபம்விலக்குதற்கெளிதோநம்மால். ௯௨

முதிரைமோதகவிளாவின்முதுகயமுகதெம்மான்முன்
னதகவீறுரைத்துநீசனையினையநதச்சாபஞ்
சதுமுகனவனைவேண்டச்சதுர்த்தியினமைத்துநீத்தா
னிதுவுமங்கவனாற்றீர்தியென்னலுமவனபாற்சென்றான். ௯௩

வியன்மதியுலகினுனகும்விண்ணிடைநானகும்வீய
வயிரவாட்படையான்முனனர்வளாசலைநான்குநதேய
வயன்றனக்கலைமூன்றேகமவனவழிவிடுப்பவேகி
யுயர்பிரான்கயிலைவெற்பிலொருகலையொடும்போய்வீழ்ந்தான். ௯௪

மறைகளின்முதலவாவோலம்வானவராவிகாத்த
கறைகெழுமிடற்றாயோலங்கணனுசற்பெருமானோல
மிறைவனேயோலமோலமென்னலுமிரங்கிநாதன்
பிறையையோர்கரத்தால்வாங்கிப்பிறழ்சடைமுடிமேற்கொண்டான். ௯௫

அருக்குறைமதிமேற்சாபமயனின்றுபணிவினாவ
முருகுறைபிணிறுங்கொன்றைமோலியான்முடித்ததிங்கட்
கொருகுறையிலதாய்த்தன்பாலுற்றதால்வளர்வுமாநோய்
வருமுறையதனாறேய்வுமதிதொறுமதிக்குவைத்தான். ௯௬

இன்னவையுணர்ந்துதக்கன்யான்புரிசாபந்தீர்ப்பான
பின்னல்வேணியனேயென்னப்பிதற்றலும்புலகனோக்கிச்
சன்னிதியடைந்தோற்காத்துன்சாபமுந்திறுவிகின்சீர்ப
பொன்னனார்வாழ்வுங்காத்தான்புரையதோவெனநதீர்ந்தான். ௯௭

சாதனைத்தவழும்வீறுந்தக்கனார்மிக்கவாழ்வு
மாதாரறுபானமூவராகியமக்கட்பேறு
மோதுதல்புரிந்தாணிப்பாலுயர்புகழ்ச்சதியையீன்று
காதனார்க்கீய்ந்தவாறும்வேள்விசெய்நயப்புஞ்சொல்வாம். ௯௮

இரசதகிரிமீதிலிறைவர்பாலெம்பிராட்டி
யரசுவீற்றிருக்குமெல்லையடிதொழூஉநிலமெல்லாம்
வரதனீநடத்தும்பான்மைவகுத்தெனக்குணர்த்தாயென்றான்
௧ முரகரிக்கரியநாதன்முறுவல்கூர்ந்தருளிச்செய்வான். ௩௯

சகளநிட்களமேயாகிச்சகலமுமொடுக்கந்தோற்ற
நிகழ்தரப்புரிவோமென்றுநிகழ்த்தலுநிமலமேனி
யகளமாமுனக்கேதென்றாளருளுருவாவதென்றான்
புகலுநின்னருள்யானெல்லாமெனதென்றாள்புவனமீன்றாள். ௪௰

அகிலமாமுணர்வைநாதனம்பிகையுளையான்மாற்ற
நிகிலமுமயங்கிப்பானுநிலாவொளிதிறம்பியேனைச்
சகமுளோர்சடமாய்வீழ்ந்தார்சதுமுகத்தயன்மாலானான்
முகில்வண்ணன்பிரமமானான்மூவுலகிருளாயிற்றால், ௪௧

யாவுமேமருளாய்க்கன்மமிகந்துமாசுறலாலஞ்சிப்
பூவையென்மடமையாவும்பொறுத்தியென்றடியில்வீழ்ந்தா
டேவிமெய்த்துளக்கநீங்கத்திருவுளமிரங்கியண்ண
லாவியாய்நிறைந்துநின்றானகிலமுமெழுந்தவன்றே. ௪௨

உணர்ச்சிமீண்டிறைவனல்கவுலகுயிர்த்தெழுந்ததம்மா
கணத்தினிலுகம்பல்கோடிகழிதலாற்கன்மமாறாப்
புணர்ப்புறுதலமேற்குற்றம்போகவெனக்கவுரிபோற்றத்
தணப்பினாற்பிறவியெய்தித்தவஞ்செய்துதவிர்ப்பாயென்றான் ௪௩

வள்ளலைப்பிரிந்துதேவிவலம்புரியெனக்காளிந்தி
வெள்ளமேன்மிதந்துபூமேல்விரகமுற்றுழன்றுதக்கன்
பிள்ளையாயூழிகாலம்பெருந்தவமுயன்றும்பாவந்
தள்ளுதற்கரியதானாற்சகத்துளோர்க்கெளிதோவம்மா. ௪௪

மணந்தனன்மறையோனாகமழுவலான்மாதைவேட்டுத்
தணந்தனன்மறைந்தானென்றேதக்கனுங்கதமேற்கொண்டா
னணங்குபின்வருந்திநோற்பவார்வமுற்றெய்திநாதன்
கணந்தொழவிடைமேற்கொண்டுகயிலைமால்வரைமேற்போந்தான். ௪௫

தந்தைதாயுணராவண்ணந்தன்மகட்கொடுசென்றானென
றெந்தையார்தமையெண்ணாமலிகழ்வதுதொடுத்தான்றக்கன்
சிந்தையாலமருண்ணிச்சிறுவிதிக்கிதனாற்றீமை
வந்திடுமக்குமேதம்வருமெனவெருவிச்சூழ்ந்து. ௪௬

ஆதியார்வரத்தாற்பெற்றவரசினாலவன்பால்யாரும்
போதராதிருந்துகூடாதாதலாற்புனல்சேர்வேணி
நாதர்பாலிவ்லையுய்ப்பநகையறுமென்றுதேறி
மாதுநின்மருகற்காண்பான்வருகெனவவனுஞ்சென்றான் ௪௭

---

௧ முரகரி—விஷ்ணு.

தவளமால்வரையைக்காத்தோன்கமலத்தோன்குலிசத்தாலே
துவளமால்வரைகளீர்ந்தோன்சுரர்களுந்திரளாய்வெள்ளித்
தவளமால்வரையைநோக்கித்தக்கனோடெழுந்துமுக்கட்
பவளமால்வரையைக்காண்பான்பரிவினால்விரவிப்போந்தார். ௪௮

போந்தனர்வானோர்வெள்ளிப்பொருப்பிறைசெம்பொற்கோயில்
சார்ந்தனர்வாயில்பூதர்தடுத்தனர்விழியுந்தாளுஞ்
சோர்ந்தனனகங்கரத்தாற்சிறவிதினனுன்செல்வி
சார்ந்தனைபணிவாரெல்லாங்கடைதலையின்றிசசென்றார். ௪௯

எரிமணியிமைக்குங்கோயிலிமைப்பிலாவிமையோர்புக்கு
வரிவிழிமடந்தையோர்பான்மருவிவீற்றிருந்தானன்னை
யரியணையணுகித்தாழ்ந்துபணிந்தனருகாந்தவாரி
கிரிசனெம்பெருமான்வெள்ளிக்கிரிமுனர்த்தாழ்ந்தலேய்ப்ப. ௫௰

சொல்லினளரிகருமோலித்தனக்கினல்விதிக்குமூரல
வில்லிருறகுலிசத்தாறதுவிழியினலமாக்கினப
நல்கினன்சமையர்தோறுநண்ணியகடவுளாகி
யல்கலினுயிர்கட்கெல்லாமள்வினுக்களவாயநிற்பான். ௫௧

காபபதுகடனுக்கொண்டகண்ணனையினிதுநோக்கி
மாப்புவனங்கள்யாவும்வளவிதேயென்றனனோன்
பூபவன்றனக்கும்யாவும்புரக்குமென்றனககுமேத
நீப்பவனுனைநீயாகநிறைவலாறகுறைவேதென்றான். ௫௨

கரியுரியாடைபோர்த்தகண்ணுதறகருணைமூர்த்தி
யரிபிரமாதியோரையவரவரதுகாரதுப்
புரிவளபுரிந்துவாழுமின்போதுமினெனறுவாக்கால்
விரிதருகுறிப்பானேக்காலவிடைகொடுத்தருளப்போந்தார். ௫௩

படையினார்வணங்குநேமிப்படையினனுதிவானோர்
விடையினர்சரணம்போறறிவிடையினைமீளுங்காறுங்
கடையினார்முகனுங்கோயிறகடையினிலமர்ந்தான்றக்கன்
புடையினார்பரவக்கொங்கைப்புடையபினூர்கவரியேந்த. ௫௪

திருமலைக்கோயில்வாயில்செறிந்தசாரதரைநோக்கி
மருகனைமகனைக்காண்பான்வருமெனைதடுத்ததென்னேவ
லரிதனையயனைவானிலமரரைவிடுத்திர்நீரென
பெருகடித்தொழும்பராயும்பேதமேபுரிந்தீரொன்றன. ௫௫

வணங்குதியாகிற்சேறிவள்ளல்பாலென்றார்பூத
ரணங்கினையவனுக்கியாந்தேனடியர்போல்வணங்கேனென்னைக்
கணங்கனீர்தடுத்தவாற்றாற்காண்மினுங்கடவுள்பூசை
தணந்திடவுலகம்யாவுந்துடைப்பனென்றுருத்துப்போனான். ௫௬

என்றனனிருந்தார்தம்மவெழுந்தனனழாமாகர்
பொன்றுணைக்கவரியேந்தப்புள்ளிடைதட்பப்போகிச்
சென்றனன்கங்கையோர்பாற்றிசைமுகனதிதேவர்
மன்றனன்மகளிரோடும்வருமெனவிடுத்தானேலை. ௧௬

கனகலவனத்துத்தெய்வக்கம்பியனிறைஞ்சிப்புக்குப்
புனைமணிவாயின்ஞாயில்பொன்னெடுஞ்சிகரமன்றஞ்
சினகரமணைக்காங்கோட்டமுனிவராச்சிரமந்தெற்றி
யன்மடஞ்சாலைசோலையறப்புறம்வேதியாதி. ௧௭

ஏறுயோசனையோரைஞ்ஞூற்றிரட்டியின்யாகசாலை
நூறுயோசனைவிசாலநுவலரும்வேள்விக்குண்டங்
கூறுயோசனையான்மேருக்குறைமலையாநிறப
வீறுசேர்கடவுமெங்கவிண்ணவர்வியப்பச்செய்தான். ௧௮

வேறு.

இந்தமகச்சாலையுழித்தக்கனோலைவழியெழுந்துபோந்தார்
கந்திருவர்கின்னராதானவரியக்கர்கிம்புருடர்கருடர்போக
ரந்தரசாரியரமரர்வித்தியாதரபூதாரக்கர்மாசுதர்
மூந்துதாராகணத்தர்பாதளர்வேதாளர்முனிவோர்சித்தர், ௧௯

பன்னிருவராதவர்கள்பதினொருவருருத்திரர்மேற்பதின்மர்தேவர்
மன்னுவசுவமணிமவுலிமனுவேந்தர்நாண்டிசையின்மருடவேந்தர்
நன்னதிகளோரேழுபொழுதாறுசருக்கரைந்துநாளைகுவேத
முன்னருலகொருமூன்றுமிருமருந்துநிறைந்தனரான்முகூர்த்தமொன்றில். ௨௰

பொன்னுலகிலரம்பையர்கள்பொருப்பிலுறையரமகளிர்புயங்கநாட்டுக்
கன்னியர்களியக்ககுலப்பூவையர்விஞ்சையமகளிர்சுருபவேந்தர்
பன்னியர்கள்சுந்தருவபாவையர்களுமேமகளிர்படியமாத
ரின்னகமேனைகையரம்பையுருப்பசிதிலோத்தமைமேனிர்திராணி. ௨௧

வேறு.

வந்துதாழுமினர்மகவான்முதலோராகவானவர்குழாத்துடன்மால்வாரிமீதி, லுந்தி
பூத்தவனிடம்போய்த்தக்கனவேண்டி யுயர்மகத்திற்சதருளென் றுரைப்பமாமான்
றூந்தவெழுந்தொருகருடத்தூர்ந்தேறிமுளரிமலர்த்திருவிநெடும்வந்தான்பூமே,
லாதனனேர்புறத்தணைந்தானதனைக்காணு வறுபத்துநாற்கலையோடொருமான்வந்
தாள். ௨௨

வேறு.

புக்கநாட்செல்வம்போலும்புகலுண்டோபுகலார்முன்னர்த்
தக்கனார்வேள்விச்சாலைதனிலெவ்வுலகத்தோருந்
தொக்கனர்புவனவேந்தர்தொகையிலீசானனல்லார்
மிகவளிறசத்தியேயல்லார்மருகிற்பரமனல்லார். ௨௩

மவுணரிற்பராசரன்சீர்வசிட்டனத்திரிததீசி
சவனுயர்கும்பயோனிதுருவாசன்பிருகுத்துங்க
னிவர்களெம்மானையன்றியெய்திலரிருந்தார்மற்றைத்
தவமுயன்முனிவர்யாருஞ்சார்ந்தனர்யாகசாலை. ௭௪

பதுமநாபனுக்குமேலைப்பண்ணவர்தமக்குஞ்செய்யு
முதன்மையாஞ்சிறப்புச்செய்துமுறைமுறைவரிசையாவும்
புதல்வியர்மருகர்க்காற்றிப்பொருவருநெடுங்கூடத்து
மதகயம்புகுந்தாலென்னமகப்பெருஞ்சாலைபுக்கான். ௭௫

ஆகவனீயங்காருகபத்தியந்தென்பாலங்கி
மாகனற்கொழுந்தவீசவடவரைத்தறிவாளுங்கப்
பாகமாங்காமதேனுப்பரந்தவிசொரியநிற்ப
யாகமார்பொருள்கள்யாவுமீய்ந்திடப்பாரிசாதம். ௭௬

இரவியங்குன்றுகுன்றுத்தேவர்கள்குவிப்பவாளூர்
புரவலன்பணிப்பமோனைப்புங்கவர்திசைகள்காப்ப
விரதமார்வருக்கமெல்லாமிநதுவேகொடுப்பவேலை
மருகரோடதிதியாதிமக்கள்கைக்கருமமாற்ற. ௭௭

இருபுறத்தமரமாதர்கோடிகமேந்திச்சூழத்
திருநுதலிந்திராணிசெயும்பணிக்குறைகடீர்ப்பக்
கருணையாலுலகமெல்லாங்காப்பவன்வேள்விகாப்பப்
பொருவரும்யாகத்தெய்வம்பொலிவுறநடிப்பமாதோ. ௭௮

தருமனேகுரவனாகச்சதுமுகபிரமனீற
பிரமரிலொருவன்மேவிப்பிரமதானத்தில்வைகக்
கருநிறக்கலைத்தோல்போர்த்துக்கைத்தலம்வெண்ணைபூசித்
திருமகப்பொலிவுபூண்டுசிறுவிதியிருந்தான்மன்னோ. ௭௯

மடுத்துச்சொல்லுளாயாவாணிமறையுரைப்பவளாம்யாவு
மெடுத்துக்கைநீட்டுவாளாமெழிற்பெருந்திருவாஞ்செல்வி
விடுத்துக்கைம்மறுப்பாருண்டோதக்கனூர்வேள்விச்செல்வங்
கொடுக்கக்கைசலிப்பாரில்லைக்கொள்ளக்கைசலிப்பாரின்றி. ௮௰

இன்னவைநிகழுமெல்லையீசனெம்பெருமானன்றிப்
பன்னருமகத்தின்சாலைபடருவான்மடமைநோக்கிச்
செந்நெறிநினைப்பாருன்னிச்சென்றனர்முனிக்குழாத்துத்
துன்னுசீர்ச்சவனுந்துங்கன்றுருவாசன்றதீசிமாதோ. ௮௧

சிறுவிதிமுகத்தைநோக்கிச்செப்புவான்றதீசியார்க்கு
முறுதியேயறங்கள்செய்துயர்பலவறத்தின்மேன்மை
பெறுகதிமகமேமிக்காம்பிறங்குசீர்மகத்திலுன்போன்
மறுவறுமயத்திவல்லார்வழங்குமூவுலகிற்காணேம். ௮௨

நிச்சமார்தருவும்வானோர்நிருபனுமேவல்கேட்பப்
பச்சைமால்வேள்விகாப்பப்பண்ணவர்விண்ணோரேத்த
விச்சையாமகஞ்செய்கின்றாய்விதிம்கன்விதிநீசெய்யு
மெச்சமெனபதற்கோரெச்சமீசனில்லாததென்றான்- ௮௩

தேசமர்முனிவன்கூறச்சிறுவிதியொருவர்க்கிங்கே
யீசர்பன்னொருவருள்ளாரென்றனனிவரோநேர்யா
ரோசைவிந்துவுயாமூலவுருத்திரர்க்கென்றான்யோகி
யாசறுமனத்தனமீட்டுமுருத்திரரவரோவென்றான் ௮௪

உமையொருபாகர்க்கோதுமுருத்திரநாமஞ்சொல்வார்
தமதுருபெற்றோரங்கிசம்புவின்கணத்தோர்க்கெல்லாஞ்
சுமையுறுதாதுவைநதம்பொன்னெனிறசுவிணமாயோ
வமரரோபுலவரென்றாலாடினோர்பாடினோரும். ௮௫

கடைநடுமுதலிலாமுக்கண்ணனேகடவுளென்று
சடைமுடித்தலைவனகூறச்சாற்றுவான்முனிந்துதக்க
னிடையினிற்சடையினமாதரிருவர்வைத்தவனோயோகி
விடையினைப்பரியாவேறிவீதிபோமவனோவீசன். ௮௬

நஞ்சினையமுதுண்பானோநாணிலாநக்கன்றானோ
குஞ்சிதப்பவுரியாடுங்கூத்தனோதீர்த்தனாவான
வெஞ்சினப்பன்றிக்கோடுமீன்விழியாமையோடு
னஞ்சுகிபிறவும்பூணுங்கருத்தனோகருத்தனாவான். ௮௭

கழிதலைமாலையானோகையிலோடேந்துவானோ
கழிபுலிகரித்தோலாடைசுற்றிவெண்ணீறுபூசி
யழிதருமயானந்தன்னிலலகையோடாடுவானோ
விழியில்வேற்றுருவுகாட்டும்விகிர்தனோவிமலனென்றான். ௮௮

முறையிலான்முனிந்துகூறமுனிவிலான்மொழிவானமூல
மறையெலாங்கற்றுக்கல்லாமனத்தராய்மதத்தாலுன்போ
லிறைவனையெண்ணாராகியிருந்தவம்புரிந்தாமனோ
கறைகெழுமனத்தர்தாருகாவனமுனிவர்முன்னாள். ௮௯

ஈங்கிவர்தவத்தைமாய்ப்பமாயனையேவியெம்மான்
றீங்கனிமொழியார்க்கெல்லாந்திகம்பரனாகிச்சென்று
றுங்கவாமருங்குநெஞ்சுமாசையேயுடையராகி
நீங்கருந்தவமுங்கற்புநிறைகளுந்தோற்றாரன்றே. ௯௰

அவ்வவராபிசாரமுயன்பிநத்தாடிவேங்கை
வெளவுரியுடுத்துநாகமிலைந்துகூர்மழுவுந்திய
நவ்வியுந்துடியுமேந்திக்குதலைமுடித்துப்பூதம்
வெவ்வடர்படையாகாதன்வீரதர்வீறடக்கியாண்டான். ௯௧

உலகமீன்றருளப்பெண்பாலுகந்தனன்மலர்ந்தநாட்டந்
இலகவாணுதலாள்பொத்தச்செங்கையேர்வெழுந்தயாரி
புலமெலாமழித்தல்கண்டுபுவனமூன்றுருவுய்த்தான்
பலகதிப்பரப்பிலொன்றேபகிரதற்கேந்தசங்கை. ௧௨

வீறுசீருகாந்தம்பொங்கியெரிதெறவெளியாங்காலை
மீறிலாகமயிருலீசனிவ்வெளிமயானத்தந்த
நீறணிந்தாடல்செய்வானின்மலையொருத்திகாண
ஆதிலாத்தருமஞ்சேவாயுகந்தொறுமொருதாளேக்கும். ௧௩

மீனமாய்மறையைமீட்டுக்கமடமாய்வெற்பைத்தாங்கி
வானவர்க்கமுதமீய்ந்துமகிதலம்விழாமற்கோட்டா
லேனமாயெடுத்துமாமாலெய்துமாலடக்கிமைந்தர்
ஞானநாயகன்பாலுய்த்தார்நாட்டமுமொடுங்கோடும். ௧௪

கயமெனுமவுணன்குன்றமுயிர்க்கடல்கலக்குங்காலம்
வியமுறுதலைமுய்யவென்றுதோலுரித்துப்போர்கதா
னயன்மதஞ்சிரத்தாணிக்கியதுபலிக்கலமாச்சூலம்
வயிரவற்கீய்ந்துவிட்டான்மாலாதிசுரர்மான்மாற்ற. ௧௫

வாசவன்மதமோர்காலமாற்றவேற்றுருவாயெங்கோன்
பூசல்வெங்கதத்திலுய்த்தசலந்தரன்புவனமூன்றிற்
கேசவன்முதலோர்சாயக்கிளர்சமர்விளைத்தானவெற்பி
லீசனந்தணன்போலுய்த்தநேமியாலிருகூறானான். ௧௬

வீய்ந்தவனுருவிற்புக்குவிறலரிவிருந்தையென்னுங்
காந்தையைப்புணர்காற்சோரங்கண்டவள்சபித்துத்தீயின்
மாய்ந்தனண்மயானத்தூடுமயங்கலுமுமையோர்வித்தாற்
பூந்துழாயருளவன்றேபுனைந்துமாலொழித்தான்மாலும். ௧௭

அகிலகாரணமாவாடலாடலுக்கிசைந்தகோலஞ்
சகலமுமங்கங்காகத்தரிக்குவன்விடுப்பனல்லாற்
புகலருமுருப்பேர்செய்கைபூண்படையுடைபூண்மற்று
மகிலநாயகனுக்குண்டோநிகழ்ந்ததுநிகழ்த்துஞாலம். ௧௮

சரமசரமெல்லாந்தந்தையாய்த்தாயாய்த்தந்த
பரமனைப்பணிந்தேநீயும்பண்ணவர்க்கரசாயுந்தை
பிரமனைப்பிறையாண்டாய்பிஞ்ஞகர்க்கவியும்பெய்து
சிரமனைச்செலைவமெய்தித்திறம்பெறவாழ்தியென்றான். ௧௯

ஆங்கவன்பொருட்டாலென்றுமமுதின்றிவிடமுண்டாற்குப்
பாங்கிருற்பலியேற்றுண்ணப்பரிகலங்கொடுத்தானோங்கு
தீங்கலாவறுமைநீக்கிநேரிழைசதியையானே
யோங்குசீர்மனத்தாலீய்ந்தேதுயர்மனைவாழ்வுபெற்றான். ௨௰

துன்னரும்புலித்தோன்மாற்றித்துகில்சுற்றிமகுடஞ்சூட்டி
மன்னுபொன்னணிகள்பூட்டிமணவாளக்கோலஞ்செய்த
வென்னையோரணுவாயெண்ணாவிகழ்ந்தனனதனாலீசன்
றன்னையுமருகாவெண்ணேன்சதியையுமகளாவெண்ணேன். ௩௧

பற்றிலனெனவேதக்கன்பகர்தலுமுனிவனோக்கி
யுற்றுநீபுரியும்வேள்விக்குறுபயனளிப்பார்யாவர்
பெற்றமாமறைகள்யாவைப்பிரமமென்றுரைக்கும்பேதாய்
வெற்றிகொண்டெழுமோசேனைவேந்தனையின்றியென்றான். ௩௨

முனிவனீதுரைப்பத்தக்கன்முயற்சியேபயனைநல்கு
மெனவுலாவலிப்பப்பின்னுமிறையின்றிச்சடமாமூக்க
நனிபயன்றருமோவென்னநற்றவன்மறுப்பமற்று
முனதுரைகேட்பார்க்கனேறுவுரைப்பதெனமறுத்துச்சொன்னான். ௩௩

அவனதுபகர்தலோடுமடன்முனிச்சியஞ்சீறிச்
சிவனருளின்றிச்செய்கைசிவகோடிகளுக்குண்டோ
விவனையெண்ணாதநீயுமியலுமட்டியறம்பூபங்
கவனவெங்களத்திலாவிகழியுமட்டாடும்பூபம். ௩௪

விதுவணிசடையானன்றிவேள்விநீபியற்றுஞ்செய்கை
மதுமலர்குழலிற்சூட்டிவன்முலையாரம்பூட்டிக்
கதிர்மணிக்கலாபஞ்சாத்திக்கன்னிகையொருத்திதன்னைப்
புதுமணக்கொழுநனின்றிப்புரிமணக்கோலம்போலும். ௩௫

கண்ணனென்பவனுமெங்கள்கடவுள்பாற்சத்திமற்றை
விண்ணவர்பசுக்களன்றேவியனபசுபதியைநீக்கிப்
பண்ணமைபசுப்படுத்துப்பயனுநீயெய்துவாயேற்
பெண்ணொருபெண்ணைக்கூடிமகவினைப்பெறலுமாமே. ௩௬

வசுக்களேயாதிவானோர்காசிபன்மற்றோராய
முசுக்கள்பேரின்முனிவராலுமுடிவதொன்றிலையாற்கவ்வை
யுசுக்கள்போலரிப்பக்கூடியுயிரரித்திருந்திருமைப்
பசுக்கள்போற்படுப்பன்வந்துபசுபதியவனேயின்னம். ௩௭

உசம்பலகடந்தமுக்கணொருவனைமழுவலானை
யகந்தையாலிகந்தநீயுமழிகநினையாகசாலை
புகுந்தவர்சிதைகவேள்விபொன்றுகவெனறுசாற்றித்
திகந்தமும்புகழும்யோகிமுனிக்குழாத்தெழுந்துசென்றான். ௩௮

ஆங்கவர்போயபின்னரமரரோடிருந்துதக்கன்
வீங்குதிவேள்விசெய்தான்மேல்வருங்கருமமோரான்
யாங்குமேநிறைந்தமுக்கணிறைவனையறிவித்தன்றித்
தீங்குறச்செய்தும்பான்மைதேவர்க்குந்தெரியொணாதால். ௩௯

இருநிலப்பரப்பும்வானுமேவல்கேட்டிறைஞ்சத்தக்கன்
றிருகுசெய்மகத்தின்கோப்புநதிங்கள்காசிபனையாதி
மருகர்தஞ்செருக்குமன்னோர்மனைவியர்களிப்பும்வானோர்
பெருமையுங்கண்டுவெள்ளிப்பிறங்கல்யாழ்முனிவன்சேர்ந்தான். ௯௰

திருமலைக்கோயில்வாயிற்றிருக்கடைபலவுநீங்கி
மருமலர்த்திருவோலக்கமண்டபங்கடந்துபோகி
யருளினுற் ண்டான் ೦ சிற்சூதகிலமுமாடுங்கையாற்
கருணைகம்பரமனோ பாதகவறெறிந்தாடுவானை. ௯௰க

சடைமுடிதாளிற்சூட்டித்தாழ்ந்துவீழ்ந்திறைஞ்சிமுக்க
ணுடையநாயகனைப்போற்றியுலகெலாமீனறதாயைப்
புடையுறவணங்கிவாழ்த்திப்போந்தவாய்புதைத்துத்தக்கன்
விடையமார்வேள்விமார்க்கம்விரைவின்விண்ணப்பஞ்செய்தான். ௯௰உ

கேட்டனள்கவறுஞ்சூதங்கிடத்தினளிறைமுன்றந்தை
யீட்டியமகத்தினூர்வத்தெழுந்தனள்பணிந்துவீழ்ந்தாள்
வேட்டகத்தெவர்க்குமெய்தாவியன்சிறப்பெய்தினும்
பேட்டனகடையினூர்க்குப்பிறந்தகத்தாசைபோமோ. ' ௯௰ங

அன்னைதாள்பணிந்துகேட்பவையர்தாமுறுவல்பூத்து
நின்னையுமழையானெம்மைநினைவிலுநினையான்சென்று
னுன்னையேமதியான்போதலொழிலெனமறுத்துந்தாயர்
தன்னையர்க்கண்டுமீள்வேனென்றுபொற்சரணில்வீழ்ந்தாள். ௯௰ச

வல்லியங்கொம்புவேண்டவரதன்மேற்கருமமோர்ந்து
சொல்லியவண்ணநேர்ந்தானறயபொன்விமானமேறிப்
பல்லியங்கொம்பும்பப்பணிமொழியணங்கார்சூழச்
செல்லியற்கணங்களார்ப்பச்சிறுவிதிசாலைசார்ந்தாள். ௯௰ரு

தநிலக்குண்டங்கண்டுசமிதையாமுரந்தூஉய்ச்சாலி
முதிரவித்தெறிந்துநெய்யாமுதுபுனல்சொரிந்துநாளுந்
நிதயொடுகோளுஞ்சூழத்தீவினைப்பயிர்செய்வான்முன்
புநியகல்வினைபோற்செனறுபுகுந்தனள்புவனமீன்றாள். ௯௰சு

வன்சுதைதிற்றுஞ்சாலைவாஞ்சையின்வருகின்றானைத்
தன்சுதையெனவும்பாரான்றகவிலன்வருகன்றூட்டாப்
புன் ✠ சுதையனையனுவப்புறக்கணித்தகலாநின்றான
மென்சுதைதனைக்கண்டாலம்விலங்குதல்வழக்கேயன்றே. ௯௰எ

நியவனிருந்தமார்க்கநிருவுளந்தனிலெண்ணும
னுயகேட்ந்தானுள்ளோநடத்தலுமவன்காணுது
தாயருந்தனைவிமாருந்தமுவினர்மகிழ்ச்சிகூர்ந்தா
ராயிழைபாசவர்க்கமகற்றினுமகனுமேயா. ௯௰அ

೦ சிற்சூது ஞானவினையாட்டு. ✠ சுதை பால்கொடாபசு.

பயந்தனள்சிறப்புச்செய்யப்பயந்தனள்பதகனுலே
வியந்துடன்பிறந்தார்யாரும்விருப்பினர்வெறுப்பார்போன்று
நயந்தனளாகன்றுள்செல்வியணங்கனார்குழாத்தைநீக்கிப்
புயங்கலையுரிவைபோர்த்தான்புரிமகமுன்னர்ப்போந்தாள்.                                    கஎ௯

கண்ணினைமலருளானைக்கற்பகவனத்துளானை
விண்ணவர்பிறைவானில்வெண்மதிக்கடவுளாதி
யெண்ணருமருகர்தம்மையாகத்திவ்வரித்தாய்முக்க
ணண்ணலெம்பரனையெந்தாயயர்த்தனைபோலுமென்றுள்.                                    கஉ0

அலைகடலமுதப்பாயலண்ணலுமமுதமுண்ணும்
புலவரும்புலவர்கோனும்புலவருக்கமுதநல்கும்
கலைநிலாவொளிருநதிங்கட்கடவுளும்வளர்பொறசாலை
நலமிலாவிடத்தையுண்டானண்ணுதற்குரித்தோவென்றுன்.                                    கஉக

ஆரணன்வெருவியோடவமரர்களோடவோடா
காரணனவெனியமேனிகரியதாய்நகெங்கியேகிப்
பூரணமுறையோவென்னப்புகறலும்விடதைதயெங்கோன்
பாரணஞ்செயலாலன்றேபருகினாமுதமெனறுள்.                                    கஉஉ

மன்றிடைநிருத்தஞ்செய்துமனைதொறும்பலியேற்றுண்டு
குனறுறைகுலமிலானைக்கூட்டலன்வேள்விக்கென்று
னுனறனிமகவையனாற்குத்விஇனநலமென்சொல்வா
யென்றனளதனுனிவிரிருவருந்தவிர்கவென்றான்.                                    கஉங

அங்கணுயகனைமுக்கணிலநாயகனைமூர்ககன்
பங்கமாயிகழ்தலாலேதகைமேறபழையகாதன்
மங்கைநாயகியாண்முறறுமறநதனணமடவார்க்கெல்லாந
தங்கணுயகனேயனறிததநதைதாய்தமர்வேறுண்டோ.                                    கஉச

மநதிரமறைகளபாய்மாமகத்திலெண்டிசைகள்காக்கு
மிநதிரன்முதலோர் ○ அசரிமையவாமுனிவோர்தொண்டர்
சநதிரனகதிரோனக்கிதம்பிரானவிழிதேர்பூமி
யநதரமனைத்துமேனியவனலாதுலகமுண்டோ.                                    கஉரு

சீர்மகமுனக்கேநின்டுச்செயுமிடமேதுநீதான்
யார்மகனறநதைதாயர்யாவரொன்றுணராய்போலும்
போர்மழுவிடையார்க்கனபுபுரிநதமெய்த்தவத்தாலன்றே
தாமகபதியேயாதிதலைவர்க்குநதலைமைபூண்டாய்.                                    கஉசா

நெதியுளார்செல்வம்பெற்றுனெறியினாழுகிவாழ்வா
ரறிவிலார்செல்வம்பெற்றாலளவிலாவகநதைப்பெயும

---

○ அசர்—படைஞர். உடைதநப்வர்எனிறுமாம்

பிரிதுகண்டெரியாரோயும்பிடித்திடுமெலையைமாற்ற
வறுமையேதண்டமென்னுமிரண்டுமாமருந்துமாதோ. ௧௨௭

சிட்டரைப்பரிக்குந்தேவதேவைநீயிகழ்தலாலே
துட்டநிக்கிரகஞ்செய்யத்தோன்றலார்தோன்றுநிற்ப
ரிட்டமாமுனிவர்சொல்லுமெம்மனோர்மொழியுங்கேளாய்
மட்டறுசெல்வமந்தோமதத்திழலழிகின்றயால். ௧௨௮

யரவசோன்மழுவலானையிகழ்வரோடுடனேயர்தப்
பாவனாயடிதல்வேண்டும்படாதெனிற்பழிமேல்வைத்து
வீவதேவேண்டுமாவிவீயாதிடாதவ்வூர்விட்டுப்
போவதேவேண்டும்வேண்டார்பொருந்துவர்சிவத்துரோகம். ௧௨௯

என்றனர்கவுரிமானத்திவர்ந்தனளணங்கார்சூழச்
சென்றனள்கயிலைவாழ்வைத்தெண்டனிட்டிறைஞ்சியோர்பான்
மன்றலங்குழல்பின்சோரமனத்தொருவேகநூண்ட
நின்றனள்கமலம்வேர்ப்பநீலங்கள்சிவப்பநாணி. ௧௩௰

அணங்கெழுந்தருளும்பான்மையறிதலாலமரிலேற்ற
கணங்களைத்தூநதிட்டனேனுங்கனன்மகத்தாபிகாரத்
துணவெழுதறுகட்பூதமொறாத்தரும்பிறவுநோக்கி
மணங்கெழுகோனையார்முன்சென்றணைமகதியாழோன். ௧௩௧

வேறு

மமந்தயான்மதியழிக்கிடுதக்கன்மாமகளா
முலைமலையண்ணலுணைதருளொளையலனுமையோ
டமையவேருநின்சணங்களையட்டதனாமலா
விமையவர்கவிசொரிந்துகையகழ்ந்தனெனென்றான். ௧௩௨

முனிவன்வாசகந்திருச்செவிபுகுதலுமலவன
புனிதவாயிதழ்துடித்ததுவெகுண்டதபுருவ
நனிகொள்வாணுதலிவர்ந்ததுசிவந்ததுநயன
மனிலமங்கியுமொழுங்கினமுங்கினவகிலம். ௧௩௩

மாரணிங்கிலவிழிக்கடைசிவந்தடைந்திதா
மூரல்வந்துடமுபுபுரங்களும்முழுதும்
வேரம்வந்தடக்கடையுசயிலையனவிமலன்
பாரவெங்கதமடக்கியோருதிப்பெரும்பார்த்தான். ௧௩௪

௰௩-வது—தக்கன்வேள்விச்சருக்கமுற்றிற்று.
ஆகத்-திருவிருத்தம்—௭௱௪௰௮.

## ௰௪-வது-தக்கன்வேள்வியழிந்தசருக்கம்.

பார்த்ததிக்கினிற்கொடுமுடியாயிரம்பரப்பிச்
சூர்த்ததிண்புயவனாயிரண்டாயிரநதுளக்கிப்
பேர்த்ததாள்களிலண்டமுங்கண்டமும்பெயர
வேர்த்தெழுந்தனன்வீரரில்வீரரில்வீரன். ௧

அண்டகோளகைமுகடுறுநெடுமுடியனந்தஞ்
சண்டபானுவோர்வடிவெடுத்தனவொளிதழைப்பக்
கண்டகங்கதிரொதிப்பவோர்கனகமால்வரைமேன
முண்டகங்களாயிரமுகிழ்த்தெனக்கரமுகிழ்த்து. ௨

காற்றுமொன்றுதீயொன்றலைவிரண்டிலைகடப்பக்
கூற்றமென்பதுமொன்றலாவிரண்டிலைதுமைப்பத்
தோற்றயன்சிரகரனைகலாலைந்திலைதமிப்ப
வேறெழுந்திசையெட்டலாற்பிறிதிலையிறுப்ப. ௩

குரைபுறக்கடலொன்றலாவிரண்டிலைகுடிப்ப
வரைசெய்மேருவுமொன்றலாவிரண்டிலைவளைப்ப
வுரைசெயண்டமேற்பித்திகையிரண்டிலையுடைப்பப்
பரசுபாணியாயழைத்ததன்பணிக்கெனப்பணிந்தான். ௪

பொன்பருப்பதமண்டமெண்டிசைகள்யாம்புரிந்த
மென்பரப்பெலாமழிப்பதருதித்திடேல்வீர
வன்பகத்திலாச்சிறுவிதிபெருமகமழித்து
வன்சிரத்தையுந்துணித்திவண்வருகென்றான்வரதன். ௫

என்னலும்பணிந்தெழுந்தினிவிடைபெற்றேன்றி
யனைபத்திரகாளிபல்கணத்தொடுமணைந்தா
டனிடைப்பலகோடியர்வீரரைத்தந்தான்
பின்னர்முன்னருமருங்கினுநெருங்குறப்பெயர்ந்தான். ௬

ஆனைதந்தபோர்வையுமடற்புலிகொடுத்த
தானையும்பெருந்தானையங்கடற்புலிதாங்கு
மேனமாமருப்பணியுடனெரிகடாக்கிடையேய
போனமாமறைமீட்டசேறகணைகளும்பொலிய. ௭

உரவுமார்பிடைச்சிங்கவேற்றுரிவையுந்தரிகம்
விரவுமாசுணக்கங்கணமவிர்பணாமணிகள்
கரதலந்தொறுமகுதர்தரக்கலைமதிக்கணம்போற்
பிரமமாலசிரமாலைகள்புடைதொறும்பிறங்க. ௮

ஆயிரம்பணநெடுமுடியுடையக்கச்சசைய
வாயிரங்குபொற்கழலொலியுருமொலிமடுப்பச்
சேயிருந்திருமுகர்தொறுஞ்செறிதுதல்விழியாற்
காயகங்கையும்புறக்கடல்களுங்குடர்கலங்க. ௯

வடிநெடுந்தடைக்கொடிகள்வானகத்தொளிமறைப்ப
விடைநெடுங்கொடிநிலவுமேலிருளெலாம்விழுங்க
வடிபெயர்ந்திடும்விசைதொறுந்திசைதொறுமதிரத்
தொடிநெடும்பணிச்சதுரமதமண்டலந்தூரப்ப. ௰

